உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்.

# மெய்யுணர்வு.

அதாவது மெய்யாகிய பொருளையுணர்தல் - ஓர் அறி உயிரேனும் புல்முதலாகச் சொல்லப்பட்ட பலபிறவிகளுட் சென்று ஆன் மாக்கள் புனிதமாய மனிதப்பிறவியை யடைகின்றனவென நாமறிகினறோமாதலால், மத்திய உலகமாய இம்மண்ணுலகத்துத் தோன்றிய நாம் பெற்ற அரிய மானுடையாக்கை யாலாகிய பயனை எய்த வேண்டுமாயின் மெய்யாகிய பொகள் ஈதென உணர்தலே வேண்டும். அன்றியும், ஐம்பூதச்சேர்க்கையாலாய இவயாக்கை நீரிற் குமிழியும் வானின் மின்னலும் போற்றோன் றிமறைவதாகவும் உள்ளது, ஆதலால் இவ்யாக்கை விரும்பி மகிழும் நில்லாத இளமையையும், நிலை யாத செல்வத்தையு மெய்யென வெண்ணி நாம் வறிதே காலத்தைப் போகவிடாது மெய்யுணர்வையடைய விரைந்து முயலல் வேண்டும். அம்முயற்சியாவது ஒருவனுக்கு எழுமையும் உதவும் கல்வியேயாம். அக்கல்வியைக் கற்குங்காலத்தும், உலக நூல் ஓதி உறு பயன் அற்றுப் போகாமல், அறிவு நூல்கற்று அடங்கி நிற்றல் வேண்டும். அடங்கி நிற்றலாவது, நூல்களிற் கற்ற வண்ணம் உயிர்க்குறு திபயப்பதாய சன்மார்க்க வழியில் செல்வதேயாம், அச்சன்மார்க்க வழியிற் செல்வதற்குபாயம் நாம்யாதொரு உயிர்க்கும் ஊறு செய்யாதிருப்பது ஒன்றேயாகும்.

அவ்விதம் நாம் ஓர் உயிர்க்கும் ஊறு செய்யாதிருக்க விரும்பின், கொலை செய்தல், கள்ளுண்டல், பொய் மொழிதல், சூதாடல், களவாடல் முதலியமாபாதகங்களினின்றும் விலகியிருத்தல் வேண்டும். அவ்வைந் தையும் தவிர்த்தாலன்றி, நாம் மெய்யையுணரும் மெய்யராக இருத்தல் முடியாது. அது என்னையோ வெனில் எல்லாவுயிர்களையும் தன்னுயிர் போல்நோக்கும் அந்தணத்தன்மை வந்தாலன்றி மெய்காணுதல் கூடாதாதலால் கொலை செய்பவரும், களவாடுநரும், பொய்மைகூறுபவரும், கள்ளுண்பவரும், புலாலுண்பவரும், பிறவுயிர்களுக்கு ஊறு செய்பவர் ஆகி மெய்காணுதல் கூடாதவராவர்.

இனி, அந்தணத்தன்மையடைந்தோரும், ஐம்புலனடக்கிய அறிஞரும் மயங்கிய அறிவுடையோர் கூறுமதங்களிற் சென்று மயங்குவ பாயின் அவரும் மெய்காணுதல் கூடாதவரேயாவர். இது பற்றியன்றோ, மெய்கண்டார் வழித்தோன்றிய உமாபதி சிவமும்,

".................. நித்தலுமே,
பூசிமுடித்துண் எடுத்துப் பூங்குழலார் தங்கலவி
யாசைதனிற் பட்டினப வார்கலிக்கு - ணேசமுற
நின்று திளைக்கு மிதுமுத்தி யல்லது வே

றின்று திளைக்கு மிதுமுத்தி - யன் றன்
றிலகா விருளலகை போலிகலே பேசு
முலசா யதன்பா லுறாதே - பலகாலுந்
தாய்பிர மங்கண்ட வர்போற் றம்மைக் கண்டாங் கதுவே
நாம்பிரம மென்பவர் பானண்ணாதே - யூன் றனக்குக்
கொன்றிடுவ தெல்லாங் கொலையல்ல வென்று குறித்
தென்று மற மேதெய்வ மென்றென்று - வென்றிப்
பொறையே யெனும்புத்தன் பொல்லாத புன்சொன்
மிறையே விரும்பிவிழாதே - சிறைமேவி
வாழ்பவர் போன் மண்ணுலகின் மன்னியுரோமம்பரித்துத்
தாழ்வுநினையாது துகிறானகற்றி - யாழ்விக்கு
மஞ்சுமடக்குமது முத்தியென் றுரைக்கும்
வஞ்சமணன் பாழிமருவாதே - செஞ்சொலா
லாதிமறையோ தியதன் பயனொன்றும் மறியா
வேதியர் சொன் மெய்யென்று மேவாதே - யாதியின்மே
லுற்ற திருநீறுஞ் சிவாலயமுமுள்ளத்துச்
செற்றபுலையர் பாற் செல்லாதே - நற்றவஞ்சேர்
வேட முடன் பூசையருண் மெய்ஞ்ஞானமில்லாத
மூடருடன் கூடி முயங்காதே - நீட
வழித்துப் பிறப்பதறியாதரனைப்
பழித்துத் திரிபவரைப்பாராதே"

என வற்புறுத்திக் கூறியது. ஏனெனில் உலகவின்பத்தையே பொருளெனக் கொண்டு மயங்குஞ் சில மதங்களும், இறைமைக்குணங் கள் இல்லாது செத்துப் பிறக்கின்ற தெய்வங்களை நாயகமாகக் கொள்ளுகின்ற சிலமதங்களும், தம்மையே கடவுள் என்று சிலர் கூறுகின்ற மதங்களும், உண்மை காணுதற்குரிய மதங்களாகா, அது ஏன் எனில், - இம்மதங்கள் எல்லாம், மறுமையும், நரகமும், வீடும், உண்டென அறியாதவைாய், வெள்ளியை இப்பியென்றும், குற்றியை மகன் என்றும், மயங்குவனவாய் உள்ளன. ஆதலால், உலகத்து முப் பொருள் உண்மையுணர்ந்து, தோற்றமும் ஈறும் இல்லாதது பதியென அறிந்து நிற்றலே மெய்யுணர்வு ஆகும்.

இனி முப்பொருளாவது பதி, பசு, பாசமேயாம். இம்மூன் றும் நித்தியமாயினும் முதற்பொருளாய பதி செத்துப் பிறக்கின்ற தகுதி : புடையது. அன்று ஆதலால் அதுவே மெய்ப்பொருளாம். அப் பொருள் எது எனின் சங்காரகா பணன் ஆகிய தலைவனேயாம். சிரு ட்டி திதியைச் செய்கின்ற தலைவராய மற்றைய இருவர் சங்கார காலத்தில் அழிந்து போகின்றனர் ஆதலால் யாவரையும் அழித்துத் தனித்து நிற்கும் சங்காரகாரணனே கருத்தாவாவன், அவனே மலரில் மணமும், எள்ளில் எண்ணெயும் போல் எல்லா ஆன்மாக்களிடத்தும் நீக்கமற நிறைந்துள்ளவன் என்பதைப் பாண்டியன் பிரம்படியும், அருச்சுனன் வில்லடியும் பட்ட இடங்கள் இவையென உணர்ந்த அறிஞர் மறுப்பதற்கில்லை. இனி, அவனடி சென்று சேர்வதைப்போ திக்கும் மெய்ந்நூல்களே மெய்ப்பொருளை அறிதற்குக்

கருவிகளாகும். அவை, நெருப்பிலிட்டும், ஆற்றில் விட்டும் முறையே வேகாமலும். எதிர் ஏறியும், ஆண்பனை பெண்பனையாகியும், பாம்பின் விடந்தீர்ந்தும், எலும்பு பெண்ணாகியும், இறந்த மகன் எழுத்தும், நீற்றறை குளிர்ந் தும், யானை அலறிச்சாணிட்டும், மலையே தெப்பமாகியும், ஆற்றிலிட்ட பொன் குளத்திடை வந்தும், பாலை நெய்தலாசியும், சோதியாகிய பரம்பொருளைச்சோறு இரந்திடச் செய்தும், ஊமைப் பெண்ணைப் பேசுவித்தும், புத்தரைவாதில் வென்றும் புகழுற நின்ற தேவார திரு வாசகங்களும், சிவஞான போதமுதலாகச் சொல்லப்பட்ட பதினான்கு சாத்திரங்களுமே யாகும்.

ஆதலால் உயிர்க்குறுதியென இவைகளை அருளிய சைவசமயாசாரி யர்கள் நால்வரையும், சந்தான குரவர் நால்வரையும் வழிபட்டு அவர்கள் பரிந்தோதிய ஞானநூல்களை ஓதி உய்பவரே மெய்யுணர்வு உடைபவராவர்.

இவைவிட்டுப் பொய்திகழும் உலகநடையைக் கைப்பற்றி, மெய்யெனப்பெயர் பூண்டுள்ளபொய்யாகிய தேகத்தைப் பேணுதல் கருதி, வாய்மை மறந்து, தவம் எனும் புலித்தோல் போர்த்து; வேட்டுவன் புட்களை மயக்க இசைகாட்டல் போல் உலகோரைவஞ்சித்து, விலாய் புடைக்க உண்டு திரியும் போலி அடியவர்களும், சிறுபயன் கருதித் தாம் கொண்ட கொள்கையினின்று மாறி மலங்கு மீனின் கொள்கையுடையராய்,

“மிடுக்கிலா தானை வீமனேவிரல் விஜய
னே வில்லுக்கிவனென்றும் :
கொடுக்கிலா தானைப்பாரியே யென்று கூறி
னுங்கொடுப்பாரிலை
பொடிக்கொள்மேனியன் புண்ணியன் புகலூ
ரைப்பாடுமின் புலவீர்காள்
அடுக்குமேல மருலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவில்லையே”

என்ற பரமாசாரிய சுவாமிகளது புத்திபோதிப்பை மறந்து, பரசமயத்தவர் விரும்பப்பலகூறி, இடர்ப்படுகின்றவரும், மெய்யுணர் வுடையோராகார். ஆகையால் நமரங்காள், அண்டர்பிரான், நான் முகத்தோன், ஆழியான் ஆகிய இவர்கள் தொழும் புண்டரிகமலர்த்தாளைப் போற்றி, மண்டனில் பிறந்தபெரும்பயன் எய்த நங்கையகப்பட்ட மெய்ப்பொருளாகிய சைவசித்தாந்த சமயத்தையும் அதின் தலைவராகிய ஆசாரியர்களையும், உண்மை நாயன்மார்களையும், வழிபட்டுச் சன்மார்க்க நெறிநின்று, ஒளிவளர் விளக்காய் உலப்பிலா ஒன்றாய், உணர்வு சூழ் கடந்ததோர் உணர்வாய், தெளிவளர் பளிங்கின் திரண்மணிக்குன்றாய், சித்தத்துள்தித்திக்குந் தேனாய், அளிவளர் உள்ளத்து ஆனந்தக்கனியாய், அம்பலம் ஆடரங்காக வெளிவளர் தெய்வக்கூத்துகந்த சிவபரம் பொருளைப் பரவி, யாடி, கைகொட்டி, பதமலர்சூடி, மெய்புணர்வுடையோராய் வாழ்வோமாக - சுபம்.

